ஸ்ரீ:



திருமங்கையாழ்வார் அருளிச்செய்த

# திருவெழுகூற்றிருக்கை

## இனிய எளிய விளக்கம்



ஸ்ரீஉப.வே. திருவள்ளூர் திருமலை ஈச்சம்பாடி

ரங்கநாதாசார்யர் ஸ்வாமி

ஸ்ரீ:



திருமங்கையாழ்வார் அருளிச்செய்த

# திருவெழுகூற்றிருக்கை

## இனிய எளிய விளக்கம்

ஸ்ரீஉப.வே. திருவள்ளூர் திருமலை ஈச்சம்பாடி

**ரங்கநாதாசார்யர் ஸ்வாமி**

Copies are available with :

1. **SRI S.S. GOPALAN**

No.57, Velachery Main Road,

Madipakkam, Chennai - 600 091.

Phone : 22580622

2. **SRI. R. SANTHANAM**

No.2/1068, 9th Street, Periyar Nagar,

Madipakkam, Chennai - 600 091.

Phone : 2258 2868

ஸ்ரீ:

ஸ்ரீமதே நிகமாந்த மஹா தேசிகாய நம:

தமிழ் மறை என்றும் த்ராவிட வேதம் என்றும் போற்றப்படும் ஆழ்வார்களின் அருளிச்செயல்கள் வேதத்தின் உட்பொருள் நிற்கப் பாடிய பாசுரங்களாம். இவற்றைத் தெளியவோதித் தெளியாத மறை நிலங்கள் தெளியலாம் என்றாலும் நம்போல்வரின் ஞானக் குறைவினால் இப்பாசுரங்களிலும் மறைத்தே கூறப்பட்ட அவற்றைப் புரிந்து கொள்வதற்கு ஆச்சாரியர்கள் பக்கல் காலக்ஷேபம் கேட்பது ஒன்றேவழி. அதற்கு அவகாசமும் வசதியும் இல்லாதவர்கள்பால் பரிவுகொண்ட பூர்வாசாரியர்கள் பல வ்யாக்யானங்களை வெளியிட்டு அருளினர். ஆனால் அவ்யாக்யானங்களும் அவ்வக்காலத்து உரைநடையிலும் வழக்குமொழியிலும் அமைந்துள்ளதால் இன்றைய சூழ் நிலையில் புரிவது கடினமாக உள்ளது. ஆக, அவ்யாக்யானங்களுக்கும் எளிய வெளிப்படையான உரை தேவைப்படுகின்றது. இம்முயற்சியில் பல நூல்கள் ஆங்காங்கே வெளியிடப்படுகின்றன. இந்த வகையில் திருமங்கையாழ்வார் அருளிச்செய்த திருவெழு கூற்றிருக்கை என்ற ப்ரபந்தத்திற்கு ஒரு எளிய உரை இப்பொழுது வெளியிடப்படுகிறது.

திருக்குடந்தை ஆராவமுதாழ்வான் விஷயமான இப்ரபந்தத்திற்கு வ்யாக்யானச் சக்ரவர்த்தி பெரியவாச்சான் பிள்ளை அருளிச் செய்த

இரண்டு வ்யாக்யானங்களின் துணை கொண்டு அடியோங்களின் ஆசார்யர் ஸ்ரீஉ.வே. திருவள்ளூர் திருமலை ஈச்சம்பாடி ரங்கநாதாசார்யர் ஸ்வாமி சில நாட்களுக்கு முன் எழுதிவைத்திருந்த உரையை புத்தகமாக வெளியிட அடியோங்களுக்கு அனுமதி அளித்து இந்தக் கைங்கர்யத்தில் ஈடுபடுத்திய ஆசார்யரின் திருவடிகளில் தலையல்லால் வேறு கைமாறிலோம்.

இப்புத்தகத்தை நல்ல முறையில் அச்சிட்டுக் கொடுத்து உதவிய HI-TECH GRAPHIC திரு. மாதவன், திரு. அசோக்குமார் ஆகியோருக்கு எல்லா நலன்களையும் அருளுமாறு ஆராவமுதன் திருவடிகளில் பிரார்த்திக்கின்றோம்.

மடிப்பாக்கம்,
சென்னை–91.
14–5–2007

அடியோங்கள்
துவார் பாஷ்யம் ஸ்ரீநிவாஸ கோபாலன்
பரவஸ்து சந்தானம்



ஸ்ரீஉ.ப.வே. திருவள்ளூர் திருமலை ஈச்சம்பாடி

**ரங்கநாதாசார்யர் ஸ்வாமி**

कौण्डिन्य वीररघ्वीश पदपङ्कज षट्पदम्।
रङ्गनाथ गुरुम् वंदे द्राविडाम्नाय देशिकम्॥

ஸ்ரீ:



श्रीमान्वेङ्कटनाथार्यः कवितार्किककेसरी |
वेदान्ताचार्यवर्योमे सन्निधत्तां सदाहृदि ||

रामानुजदयापात्रं ज्ञान वैराग्यभूषणम् |
श्रीमद्वेङ्कटनाथार्यं वन्दे वेदान्त देशिकम् ||

कलयामि कलिध्वंसं कविं लोकदिवाकरम् |
यस्य गोभिः प्रकाशभिराविद्यं निहतं तमः ||

## திருமங்கையாழ்வார் அருளிச்செய்த

# திருவெழுகூற்றிருக்கை

### தனியன்

**வாழிபரகாலன் வாழிகலிகன்றி**

**வாழி குறையலூர் வாழ்வேந்தன் – வாழியரோ**

**மாயோனை வாள்வலியால் மந்திரங்கொள் மங்கையர்கோன்**

**தூயோன் சுடர்மான வேல்**

ஒருபேருந்தி இரு மலர்த்தவிசில் *

ஒரு முறை அயனையீன்றனை * ஒரு முறை

இருசுடர் மீதினில் இயங்கா * மும்மதிள்

இலங்கை இருகால்வளைய * ஒரு சிலை

யொன்றிய ஈரெயிற்றழல்வாய் வாளியின்

அட்டனை * மூவடி நானிலம் வேண்டி*

முப்புரி நூலொடு மானுரியிலங்கு

மார்வினின் * இருபிறப்பு ஒரு மாணாகி*

ஒருமுறை ஈரடி மூவுலகளந்தனை *

நால்திசை நடுங்க அஞ்சிறைப்பறவை

யேறி * நால்வாய் மும்மதத்து இருசெவி

ஒருதனி வேழத்து அரந்தையை * ஒருநாள்

இருநீர் மடுவுள் தீர்த்தனை * முத்தீ

நான்மறை ஐவகை வேள்வி * அறுதொழில்

அந்தணர் வணங்கும் தன்மையை * ஐம்புலன்

அகத்தினுள்செறுத்து * நான்குடனடக்கி

முக்குணத்து இரண்டவையகற்றி * ஒன்றினில்

ஒன்றிநின்று * ஆங்கு இருபிறப்பறுப்போர்

அறியும் தன்மையை * முக்கண் நால்தோள்

ஐவாயரவோடு * ஆறுபொதி சடையோன்

அறிவரும் தன்மைப் பெருமையுள் நின்றனை*

ஏழுலகு எயிற்றினில் கொண்டனை * கூறிய

அறுசுவைப் பயனுமாயினை * சுடர்விடும்

ஐம்படை அங்கையுளமர்ந்தனை * சுந்தர

நால்தோள் முந்நீர்வண்ண ! * நின்னீரடி

ஒன்றிய மனத்தால் * ஒருமதிமுகத்து

மங்கையரிருவரும் மலரன * அங்கையின்

முப்பொழுதும் வருட அறிதுயிலமர்ந்தனை*

நெறிமுறை நால்வகை வருணமுமாயினை*

மேதகும் ஐம்பெரும்பூதமும் நீயே*

அறுபதமுரலும் கூந்தல்காரணம்*

ஏழ்விடையடங்கச் செற்றனை * அறுவகைச்

சமயமும் அறிவருநிலையினை * ஐம்பா

லோதியை ஆகத்திருத்தினை * அறம்முதல்

நான்கவையாய் மூர்த்தி மூன்றாய் *

இருவகைப்பயனாய் ஒன்றாய் விரிந்து

நின்றனை * குன்றாமது மலர்ச் சோலை

வண்கொடிப்படப்பை * வருபுனல் பொன்னி

மாமணி யலைக்கும் * செந்நெலொண் கழனித்

திகழ்வன முடுத்த * கற்போர் புரிசைக்
கனக மாளிகை * நிமிர்கொடி விசும்பில்
இளம் பிறை துவக்கும் * செல்வம்மல்குதென்
திருக்குடந்தை * அந்தணர் மந்திரமொழியுடன்
வணங்க * ஆடரவமளியில் அறிதுயில்
அமர்ந்தபரம! * நின்னடியினை பணிவன்
வருமிடரகல மாற்றோ வினையே!

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

இடங்கொண்ட நெஞ்சத்திணங்கிக்கிடப்பன * என்றும் பொன்னித்
தடங்கொண்ட தாமரை சூழும் மலர்ந்த தண் பூங்குடந்தை*
விடங்கொண்டவெண்பல் கருந்துத்தி செங்கண் தழலுமிழ்வாய்*
படங்கொண்ட பாம்பணைப் பள்ளிகொண்டான் திருப்பாதங்களே.

சீரார் தூப்புல் திருவேங்கடமுடையான் திருவடிகளே சரணம்.




திருவெழுகூற்றிருக்கை விளக்கப்படம்

ஸ்ரீ :

திருவுடனமரும் பரிமுகர் திருவடிகள் வாழி

அருள்மாரி அடியிணைகள் வாழி

தூப்புல் திருவேங்கடவன் திருவடிகள் வாழி

# திருவெழுகூற்றிருக்கை

கலியன் அருளிச்செய்த ப்ரபந்தங்களில் நான்காவது. திருநெடுந்தாண்டகத்தைக் கடைசி ப்ரபந்தமாகக் கருதுபவர்களுக்கு இது மூன்றாவது ப்ரபந்தம். ஒரே பாடலைக் கொண்டது. சித்திரக்கவியாய் அமைந்தது. ரத பந்தம் என்பர். அச்சின் மீதிருந்து கொஞ்சம் கொஞ்சமாக அகன்று கொண்டேபோய் பீடத்தளவும் செல்வது தேரின் இயல்பு. பீடத்தின் மேற்புறத்திலும் முதலில் அகன்றும் பிறகு சிறிது சிறிதாகக் குறுகியும் நிலைகள் இருக்கும். இது போன்ற அமைப்புடையது ரத பந்தம். இதன் கூறுகள் (நிலைகள்) ஏழாக இருப்பதால் இது எழுகூற்றிருக்கை எனப் பெயர் பெற்றது. முதல் கூறு மூன்று பகுதிகளைக் கொண்டிருக்கும். ஒன்று, இரண்டு, ஒன்று என்பதைக் குறிக்கும் சொற்கள் இவற்றில் அமைந்திருக்கும். அடுத்த கூற்றிலே, ஐந்து பகுதிகள் உண்டு.அவற்றில் முறையே ஒன்று, இரண்டு, மூன்று, இரண்டு, ஒன்று என்பனவற்றைக் குறிக்கும் சொற்கள் பயன்படுத்தப் பட்டிருக்கும். இவ்வாறு ஒவ்வொரு கூறிலும் இரண்டு பகுதிகளைக் கூட்டிக்கொண்டு போனால், ஆறாவது, ஏழாவது கூறுகளில் பதின்மூன்று பகுதிகள் இருக்கும். ஒன்றிலிருந்து ஏழுவரையிலான எண்கள் ஏறுமுகமாயும், பிறகு ஆறு முதல் ஒன்று வரையிலான எண்கள் இறங்குமுகமாயும் அமைந்திருக்கும். எண்களைக் குறிக்கப் பயன்படும் இச்சொற்கள் சிலேடையாலே எண்ணைத் தெரிவித்தாலும் ஏற்கத்தக்கதே. 'நால்வாய்' என்ற சொல்லுக்கு 'தொங்குகிறவாய்' என்பது பொருளானாலும், 'நால்' என்பது நான்கு என்ற பொருளையும் தருமாதலால், இச்சொல்லைக் கலியன் பயன்படுத்தியிருக்கிறார்.

எழுகூற்றிருக்கை என்ற சித்திரக்கவி ஒரே பாடலாகக் கணக்கிடப்படும். இதன் இலக்கணம் கூற வந்த தமிழர் "ஏழரையாக்கி முறையானே குறுமக்கள் முன்னின்றும் புக்கும் போந்தும் விளையாடும் பெற்றியால் வழுவாமை, ஒன்று முதலாக ஏழிறுதியாக ஏறியும் இறங்கியும் எண்ணடுக்குத் தோன்றப்பாடுவது எழுகூற்றிருக்கை யாகும்" என்றனர். பலவரிகள் கொண்டதாயிருக்கும் இந்த சித்திரக்கவி ஆசிரியப்பா என்ற யாப்பில் அடங்கும்.

கலியன் அருளிச் செய்த திருவெழுகூற்றிருக்கை இயற்பாவில் எட்டாவது ப்ரபந்தமாகும். இயற்பாவில் அடங்கிய கலியனின் ப்ரபந்தங்களில் முதலாவது. நாற்பத்தாறு வரிகள் கொண்டது. சைவத் திருமுறைகளிலும் திருவெழுகூற்றிருக்கை இடம் பெற்றுள்ளது. திருஞானசம்பந்தருடைய திருவெழுகூற்றிருக்கை முதல் திருமுறையிலும் நக்கீரதேவ நாயனார் செய்த திருவெழுகூற்றிருக்கை பதினோறாம் திருமுறையிலும் காணப்படுகிறது. சம்பந்தருடைய நூலில் நாற்பத்தேழு வரிகளும் நக்கீரருடைய நூலில் ஐம்பத்தைந்து வரிகளும் காணப்படுகின்றன. கலியன் செய்த திருவெழுகூற்றிருக்கைக்குப் பின்னால் 'இடங்கொண்ட' என்று தொடங்கும் பாடல் அநுஸந்தானத்தில் உள்ளது. இது கம்பர் பாடியது என்பர். சம்பந்தருடைய எழுகூற்றிருக்கைக்குப் பின்னால் வேறு பாடல் இல்லை. நக்கீரருடைய நூலுக்குப் பின்னால் ஒரு பாடல் காணக்கிடைக்கிறது.

கலியன் அருளிச்செய்த திருவெழுகூற்றிருக்கையின் தனியன்களை முதலில் காண்போம்.

**வாழிபரகாலன் வாழிகலிகன்றி**
**வாழிகுறையலூர் வாழ்வேந்தன் – வாழியரோ**
**மாயோனை வாள்வலியால் மந்திரங்கொள் மங்கையர்கோன்**
**தூயோன் சுடர்மானவேல்**

ஆழ்வாருடைய திருநாமங்கள் பலவற்றையும் சொல்லி அவரை வாழ்த்துகிறது. प्रत्यक्षे गुरवः स्तुत्याः என்ற ப்ரமாணத்திற்கு ஏற்ப அர்ச்சாரூபியாய் நம்முன்னே ஸேவைஸாதிக்கும் ஆழ்வாரை வாழ்த்துகிறது. இத்தனியனை அருளிச்செய்தவர் எம்பெருமானார். (பரகாலன் வாழி) பிறருக்கு யமன் போன்றவர் வாழி. பகவத் த்விட்டுக்களுக்குப் பயங்கரர். (கலிகன்றி வாழி) கலியின் தோஷத்தைப் போக்க வல்லவர். (குறையலூர் வாழ் வேந்தன்) குறையலூரில் அவதரித்து, அவ்வூர் வாழும்படி அதை ரக்ஷிப்பவர். அல்லது அங்கே வாழுபவர். அவருக்கும் அவர் வேலுக்கும் ஒருங்கே சேர்த்து வாழ்த்துகிறார். (மாயோனை வாள்வலியால் மந்திரங் கொள் மங்கையர்கோன் வாழியரோ தூயோன் சுடர்மானவேல் வாழியரோ) இங்கு மாயோன் என்றது திருவரங்கனை. 'கடியரங்கத்தரவணையில் பள்ளிகொள்ளும் மாயோன்'[1] என்றார் குலசேகராழ்வார். தென்னரங்க மணவாளனிடமிருந்து வாளைக்காட்டி மந்திரம் பெற்றவர் இவ்வாழ்வார். இயல்சாத்தில் அநுஸந்திப்பது ஒரு பாட்டு உண்டு. 'வாழி சுழிபொறித்த நீர்ப்பொன்னித் தென்னரங்கன் தன்னை வழிபறித்த வாளன் வலி'[2] என்ற அந்தப் பாசுரத்தின்படி இவர் வழிபறித்தது

1. பெருமா. திரு – 1.2 2. இயல் சாத்து – 2

தென்னரங்கத்தில் பள்ளிகொள்ளும் மாயோனையன்றோ. தன்னை அடைந்தவர்களின் ஸர்வஸ்வத்தையும் கொள்ளை கொள்ளும் ஒருவனிடமே வழிபறித்தாரே இவர். 'கைப்பொருள்கள் முன்னமே கைக்கொண்டார் காவிரிநீர் செய்ப்புறள ஓடும் திருவரங்கச் செல்வனார்'[1] என்றாள் ஆண்டாள். அவனிடமிருந்து பொருளையெல்லாம் கைக்கொண்டவர் கலியன். அவனிடமிருந்து பெற்றது பொருளல்ல – மந்திரம். அவனே மந்திரம். 'அந்தணர் மாட்டு அந்திவைத்த மந்திரம்'[2] எனப்பட்ட அவனிடமிருந்து மந்திரத்தைக் கொண்டார். (மங்கையர் கோன்) மங்கை நாட்டின் மன்னன். (தூயோன்) அகத்தூய்மையும் புறத்தூய்மையும் உடையவர். अनन्यार्ह शेषत्वं, अनन्य शरणत्वं, अनन्य भोग्यत्वं முதலிய அகத்தூய்மைகளை உடையவர். பஞ்சஸம்ஸ்காரம் பெற்றவர். ஆழ்வார்களில் நம்மாழ்வாருக்கு ஸேனை முதல்வர் ஏகாந்தத்தில் பஞ்சஸம்ஸ்காரம் செய்ததாக நூல்களிலே கேட்டது மட்டுமே. பெரியாழ்வார் 'தீயில் பொலிகின்ற உன் சக்கரப்பொறி ஒற்றிக் கொண்டு'[3] என்று சொன்னாலும் யார் எப்பொழுது பஞ்சஸம்ஸ்காரம் செய்தார்கள் என்பது தெளிவாக இல்லை. திருமங்கை மன்னன் உலகறிய நறையூர் நம்பியிடம் பஞ்சஸம்ஸ்காரம் பெற்றார். (சுடர்மானவேல்) தேஜோ ரூபமாயும் பெரிதாயும் உள்ள வேல். இவருக்கே இவ்வேல் தகும். இவ்வேலைத் தாங்கத் தக்கவரும் இவரே என்னும்படி பொருத்தமான வேல். கண்ணனைக் கண்டு அவனைச் சிங்காதனத்தில் அமர்த்தி ஸேவித்த பெண்கள் 'நின் கையில் வேல் போற்றி'[4] என்று அவனுடைய வேலுக்கும் சேர்த்து மங்களாசாஸனம் செய்தார்கள். எம்பெருமானைக் கண்டவுடன் பரிவாலே பல்லாண்டு பாடத்தொடங்கிய பெரியாழ்வாரும் "வடிவார் சோதிவலத்துறையும் சுடராழியும் பல்லாண்டு, படைபோர் புக்கு முழங்கும் அப்பாஞ்ச சன்னியமும் பல்லாண்டே"[5] என்று திருவாழி திருச்சங்குகளுக்கும் பல்லாண்டு பாடினார். அப்படியே ஆழ்வாரோடு சேர்த்து வேலுக்கும் பல்லாண்டு பாடுகிறார். ஆழ்வாருடைய திருநாமங்கள் அவரடியார்களுக்குச் சொல்லச் சொல்ல இனிமை பயப்பது போல அவருக்கும் சொல்லச்சொல்ல திகட்டவில்லை போலும். 'அங்கமலத்தடவயல்சூழ் ஆலிநாடன் அருள்மாரி அரட்டமுக்கி அடையார்சீயம் கொங்குமலர்க் குழலியர் வேள் மங்கைவேந்தன் கொற்றவேல் பரகாலன் கலியன்'[6] என்று தன் திருநாமங்களை அவர் தாமே தொகுத்துக் கூறுவதாலே விளங்கும். அவருடைய வேல் கொற்றவேல். ஆகையாலே தோல்வியே கண்டறியாத வெற்றிவேலாகவே இருக்கும். இருப்பினும் தம்முடைய பரிவின் மிகுதியாலே இவர் இதற்கும் பல்லாண்டு பாடுகிறார்.

---

1. நாச். திரு 11.6
2. திருநெடுந்தா 4
3. பெரியா. திரு. 5.4.1., 1.1.6.
4. திருப்பாவை 24
5. பெரியா. திரு. 1.1.2
6. பெரி. திரு. 3.4.10

திருவெழுகூற்றிருக்கைக்கு இன்னொரு தனியனும் உண்டு. ஆனால் அது மிகுதியாக வழங்கப்படுவதில்லை. நாலாயிரத் தனியன்களுக்கு வ்யாக்யானம் செய்த பிள்ளைலோகம் ஜீயர் இதற்கு வ்யாக்யானம் இடவில்லை. தனியன் வருமாறு.

**சீரார் திருவெழுகூற்றிருக்கை என்னும் செந்தமிழால்**
**ஆராவமுதன் குடந்தைப்பிரான் தன்னடியிணைக் கீழ்**
**ஏரார் மறைப்பொருள் எல்லாம் எடுத்து இவ்வுலகுய்யவே**
**சோராமற் சொன்ன அருள்மாரி பதம்துணை நமக்கே**

தொண்டரடிப்பொடிகள் அருளிச்செய்த ப்ரபந்தங்கள் இரண்டுக்கும் திருவரங்கத்தம்மானே விஷயமானாற் போல, திருவெழுகூற்றிருக்கைக்கு விஷயம் ஆராவமுதாழ்வான் ஒருவரே. இப்ரபந்தத்திற்கு பெரியவாச்சான் பிள்ளை இரண்டு வ்யாக்யானங்கள் அருளிச் செய்திருக்கிறார். முதலில் அவர் காலக்ஷேபம் அருளிச் செய்தபோது, அதில் அந்வயிக்க முடியாத ஒரு ஸ்ரீவைஷ்ணவர் அவர் திருவடிகளிலே ப்ரார்த்திக்க, அவருக்காக மற்றொரு முறை அருளிச்செய்தாராம். அதை மெனக்கிட்ட ஸ்ரீவைஷ்ணவருக்கு அருளிச் செய்த வ்யாக்யானம் என்று குறிப்பிடுகிறார்கள். இரண்டு வ்யாக்யானங்களும் ஏறக்குறைய ஒரே மாதிரியாகவே அமைந்துள்ளன. இரண்டாவது சிறிது விஸ்தாரம். இந்த இரு வ்யாக்யானங்களைக் கொண்டு திருவெழுகூற்றிருக்கையை அநுபவிப்போம்.

பரமரஸிகரான கலியனை எம்பெருமான் தன் அழகைக்காட்டி வசீகரித்தான். பின் அவருக்குத் திருமந்திரத்தை உபதேசித்து, அதன் அர்த்தமாக விளங்கும் தம்முடைய பரத்வ, ஸௌலப்யங்களையும் காட்டிக் கொடுத்தான். ஸௌலப்யம் முதலான கல்யாண குணங்களுக்கு இருப்பிடமான அர்ச்சாவதாரத்தை அநுபவிக்கச் செய்தான். திருப்பிரிதி தொடங்கி திருக்கோட்டியூரளவாக உள்ள திவ்யதேசங்களிலே மண்டி பகவத் குணங்களை அநுபவித்த இவ்வாழ்வாருக்கு ஸம்ஸாரம் பற்றிய நினைவும் பரமபதம் பற்றிய நினைவும் அடியோடு இல்லாமற்போயிற்று. ஸம்ஸாரத்தின் வெம்மையை அறியாதபடி செய்தது அர்ச்சாவதார அநுபவம். அர்ச்சாவதார அநுபவமே நிரவதிக எல்லையற்ற போக்யமாயிருந்ததால் பரமபதத்தில் இதைவிட மேலான அநுபவம் ஒன்று இருக்கக்கூடும் என்ற நினைப்பே ஏற்படவில்லை. ஆக, இவ்வாழ்வார் லீலா விபூதியையும் நித்ய விபூதியையும் விட்டு அர்ச்சாவதாரங்களாகிற ஒரு மூன்றாவது விபூதியிலே மூழ்கி இருந்தார்.

ஆனால் இவ்வநுபவம் நித்யமாக நடக்கவேண்டும் என்றால் இவர் பரமபதம் அல்லவா செல்லவேண்டும் என்று எண்ணினான் எம்பெருமான். இவருக்குப் பரமபதத்தில் ஆசையை உண்டாக்கவேணும் என்பதற்காக ஸம்ஸாரத்தின் கொடுமையைக் காட்டினான். அதன் பயனாக பெரிய திருமொழியின் கடைசியான 'மாற்றமுள'[1] என்ற பதிகத்தில் ஸம்ஸாரத்தைக் கண்டு தாம் அஞ்சி நடுங்கும்படியை பற்பல உதாஹரணங்கள் மூலம் விளக்கினார். 'இருபா டெரி கொள்ளியினுள் எறும்பே போல்', 'பாம்போடு ஒரு கூரையிலே பயின்றாற் போல்', 'வெள்ளத்திடைப்பட்ட நரியினம் போலே', 'காற்றத்திடைப்பட்ட கலவர்மனம் போல்', 'ஆற்றங்கரைவாழ் மரம் போல்'[2] என்பன அவருடைய உதாஹரணங்கள்.

விபூதி த்வயத்தையும் மறந்து த்ருதீய விபூதியான திவ்யதேசங்களை அநுபவிக்கிற இவருக்கு ஈச்வரன் ஸம்ஸாரத்தின் கொடுமையைக் காட்டுவானேன் என்னில், இவ்வநுபவம் அவிச்சின்னமாக வேணுமென்று நினைத்து அது அங்கேயொழியக் கூடாமையாலே ஆமத்தை அறுத்துப் பசியை விளைப்பித்துச் சோறிடுவாரைப் போலே விடாயைப் பிறப்பித்து அங்கே கொடுபோவதற்காகக் காட்டினான்.

இரண்டாவது ப்ரபந்தமான திருக்குறுந்தாண்டகத்தில் ஸம்ஸாரமாகிற வெப்பத்திற்குப் பரிஹாரமாக எம்பெருமானுடைய குணங்களை நெஞ்சினால் நினைந்தும், வாயாலே பேசியும், திருவடிகளிலே வணங்கியும் தரித்தார், 'என் மனத்து வந்த விதியினைக் கண்டுகொண்ட தொண்டனேன் விடுகிலேனே' என்றும் 'குணங்கொண்டு உள்ளம் கூறுநீகூறுமாறே' என்றும் நெஞ்சினால் நினைத்தார். 'நின்னையே பரவுவேனே' என்று வாயினால் மொழிந்தார். 'என் கண்ணிணை களிக்குமாறே' என்று கண்களால் கண்டார். 'மைந்தனை வணங்கினேனே' என்று திருவடிகளில் வணங்கினார். இவ்வாறு மனோ வாக் காயம் (மெய், நா, மனம்) என்ற முக்கரணங்களாலும் ஈடுபட்டுத் தரித்ததை 'வாக்கினால் கருமம் தன்னால் மனத்தினால் சிரத்தை தன்னால் வேட்கை மீதூற வாங்கி விழுங்கினேற்கு' என்று அருளிச் செய்தார்.

பெரியவாச்சான் பிள்ளை முதலிய சில ஆசார்யர்களுடைய திருவுள்ளப்படி திருவெழுகூற்றிருக்கை கலியனது மூன்றாவது ப்ரபந்தமாகும். திருக்குறுந்தாண்டகத்திலே ஏற்பட்ட பகவதனுபவம் நிலையில்லாதது என்பதை உணர்ந்த ஆழ்வார் பரிபூர்ண பகவதனுபவத்திற்கு விரோதியாயிருக்கும் ஸம்ஸார பந்தத்தை ஸவாஸனமாக அறுத்துத் தரவேண்டும் என்று

1. பெரி. திரு. 11.8 2. பெரி. திரு. 11.8. 1,2,3,4,5

பிரார்த்திக்கிறார். என்னுடைய முயற்சியால் இதை அறுக்கப்போகாது. நீயே உன் க்ருபையாலே போக்கவேண்டும் என்கிறார். பொய்கையாரும் இதனையே வலியுறுத்துகிறார்.

**சரண்ாமறைபயந்த தாமரையானோடு**
**மரணாய மன்னுயிர் கட்கெல்லாம் – அரணாய**
**பேராழிகொண்ட பிரானன்றி மற்றறியாது**
**ஓராழி சூழ்ந்த உலகு.**[1]

என்பது அவர் பாசுரம். உஜ்ஜீவனத்திற்கு உபாயங்களை போதிப்பது வேதம். அவ்வேதத்தை உபதேசித்தவன் பிரமன். அவன் தொடங்கி எல்லா உயிர்களுமே பிறப்பிறப்பாகிற பேரிடர்ச்சுழியிலே சிக்கித் தவிப்பவை. இவ்வுயிர்களுக்கு ரக்ஷகராக இருப்பவர் வேறு ஒருவரும் இவ்வுலகத்தில் இல்லை. ஆகையால் எம்பெருமான் ஒருவனையே ரக்ஷகனாக வரித்து அவனையே சரணடைந்து உபாயமாகப் பற்றினால் ஸம்ஸாரபந்தத்தை நீக்கலாம். வேறு வழியில்லை என்பது நம் பூர்வாசாரியார்களின் ஸித்தாந்தம். அரும்பதவுரைக்காரரின் வாக்கியங்கள் இங்கு நோக்கத்தக்கன. ப்ரவேசம் – உகந்தருளின நிலங்களை அநுபவித்துப் பரமபதத்தையும் ஸம்ஸார ஸ்வபாவத்தையும் மறந்திருக்க 'நீரிருக்கிறது ஸம்ஸாரங்கிடீர்' என்று 'மாற்றமுள'வில் காட்ட ப்ரதிகோடியை அநுஸந்தித்து வந்த ஆற்றாமையாலே 'வாக்கினால் கருமந்தன்னால் மனத்தினால் சிரத்தை தன்னால்' என்று கரணத்ரயத்தாலும் அநுபவித்துத் தரிக்கப்புக அதில் தரிக்கப்புகாமையாலே 'இதிலே சரணம் புகுகிறார்' என்றபடி. 'இத்தால் இஷ்டப்ராப்திக்கும் அநிஷ்ட நிவாரணத்துக்கும் ஸித்தமான உபாயத்தைப் பற்றி விடுகிறார்' என்பது கடைசியிலுள்ள பெரியவாச்சான் பிள்ளையின் ஸ்ரீஸூக்தி. ஸித்தோபாய வசீகரணமான சரணாகதியை அநுஷ்டிக்கிறார் என்பது பொருள். 'நின்னடியிணை பணிவன் வருமிடரகல மாற்றோ வினையே' என்ற அங்குள்ள கலியனின் ஸ்ரீஸூக்தி சரணாகதியின் கரணமந்திரமான த்வயத்தையன்றோ ப்ரதிபாதிக்கிறது.

இனி, பாசுரத்தின் அநுபவம்.

**ஒருபேருந்தி இருமலர்த்தவிசில் ஒருமுறை அயனையீன்றனை,**

எம்பெருமானுடைய திருநாபி ஒப்பற்றது. தன்னைத் தவிர்ந்த பொருள்கள் எல்லாவற்றிற்கும் காரணமாகையாலே. அப்படி காரணமாகைக்குத் தகுந்த பரப்பை உடையது. அந்த நாபியிலே தோன்றியது 'இருமலர்'– பரப்பையுடைய

1. முதல் திரு. 60

தாமரைமலர். அந்த பரந்த உந்தியை முழுமையாக அடைத்துக் கொண்டிருக்கும் பரப்பு. இம்மலர் ஆஸனமாயிற்று அயனுக்கு. अजः என்பது அயனாயிற்று. न जायते इति अजः அவன் பிறப்பதே இல்லை என்பது இதன் பொருளல்ல. மற்றவர்களைப் போல தாய்தந்தையரின் ஸம்பந்தத்தால் பிறவாதவன். ஆகையால் अजन् எனப்பெயர் பெற்றான். அவனை ஸ்ருஷ்டித்தாய். இது உலகனைத்தின் ஸ்ருஷ்டிக்கும் உபலக்ஷணம். ஒருமுறை அயனையீன்றனை என்பதால், ஒரே ஒருமுறை தான் பிரமன் ஸ்ருஷ்டிக்கப்பட்டான் என்பது பொருளல்ல. ஒவ்வொரு பிரளயத்திற்குப் பிறகும் ஏற்படும் ஸ்ருஷ்டிகாலத்தைக் குறிக்கும். இந்த பிரம்ம ஸ்ருஷ்டி ப்ரவாகரூபேண நித்யமாய் இருக்கும். இவற்றின் ஸத்தை முதலானவற்றை உண்டாக்கின உனக்கே இவற்றை ரக்ஷிப்பதும் பொறுப்பல்லவோ என்கிறார்.

नाम रूप विभागानर्ह மாய் தன்னோடு அவிபக்தமாயிருக்கிற இத்தை விபக்தமாக்கி, தமஸ் ஸப்தத்துக்கு வாச்யமாக்கி, அநந்தரம் ஸூக்ஷ்ம ரூபேண அக்ஷரம் அவ்யக்தம் என்கிற அவஸ்தைகளைப் பிறப்பித்து, பின்னை மஹானாக்கி, அஹங்காரமாக்கி, தன்மாத்ரைகளாக்கி, பூதங்களாக்கி, பௌதிகமான அண்டஸ்ருஷ்டியளவும் வரப்பண்ணி பின்னை அவ்வருகுண்டான தேவாதி கார்யங்களை அடங்கலும் அவன் முகத்தாலே பண்ணுவதற்காக முதலில் சதுர்முகனை உண்டாக்கினானாயிற்று. முன்புள்ள–வையெல்லாம் தானே கைதொட்டுச் செய்து பின்பு சதுர்முகனை அதிஷ்டித்து நின்று செய்வானாகப் பார்த்தான்.

**ஒருமுறை இருசுடர் மீதினில் இயங்கா, மும்மதிள் இலங்கை இருகால்வளைய, ஒருசிலை ஒன்றிய ஈரெயிற்றழல்வாய், வாளியின் அட்டனை**

தான் விளைவித்த பயிருக்கு உழவன் தானே களை பறிப்பவனாகவும் ஆவது போல் தான் படைத்த உலகுக்கு அழிவைச் செய்யும் ராக்ஷஸரை அழிப்பவனும் அவனே ஆனான் என்கிறார்.

தோன்றின களைதான் எவ்வளவு பிரபலமானது என்கிறார். भीषोदेति सूर्यः[1] என்றது உபநிஷத். எம்பெருமானிடம் பயத்தால் சூரியன் தக்க காலத்திலே உதித்து ஆகாயத்திலே சஞ்சரிக்கிறான். இப்படிப்பட்ட சூரியன் ராவணனிடம் பயப்பட்டு அவனைக் கொளுத்துவதில்லை என்கிறார் வால்மீகி. नैनं सूर्यः प्रतपति पार्श्वे वाति न मारुतः। चलोर्मिमाली तं दृष्ट्वा समुद्रोऽपि न कंपते ॥[2] சூரியனுக்குச் சொன்னது

1. தைத். ஆன. 8.1. 2. ரா.பா. 15.10

சந்த்ரனுக்கும் பொருந்தும். இருசுடர்களாகிய சந்த்ர சூரியர்கள் ஒரு ஸமயத்தில் கூட இலங்கை மீது ஸஞ்சரிப்பதில்லை. அப்படிப்பட்ட இலங்கை (மும்மதிள்) மலை, நீர், வனம் என்ற மூன்று வகை அரண்களை உடையது. அப்படிப்பட்ட இலங்கையை அழித்தான். எப்படி ? (இருகால்...) இரண்டு நுனியும் வளைந்து நிற்க ஒப்பற்றதான சார்ங்கம் என்னும் வில்லில் பொருந்திய இரண்டு பற்களையுடைய நெருப்பை உமிழும் அம்புகள். தொடுக்கும் போது அம்பாய்த் தோன்றும், எதிரியின் மீது பாயும்போது நெருப்பாய்ப் பாயும். அப்படிப்பட்ட அம்பாலே சுட்டொழித்தாய். பிரமஸ்ருஷ்டி போலே ஸங்கல்பத்தாலே செய்தது அல்ல. போர்க்களத்தில் தானே நேர்நின்று ராவணனை சித்ரவதை செய்தான் என்று கருத்து.

தன்னைப் பிரித்த ராவணனை பிராட்டி அழிக்கவில்லை. न त्वां कुर्मि दशग्रीव भस्म भस्मार्ह तेजसा[1] என்றல்லவோ அவள் இருந்தாள். அது போலவே எம்பெருமானிடமிருந்து நம்மைப் பிரிக்கும் ஸம்ஸாரத்தையும் அதற்குக் காரணமான அவித்யா, கர்ம, வாஸனா, ருசிகளையும் நானே போக்கிக்கொள்ள இயலாது. நீயே போக்கித்தரவேணும் என்கிறார். இதற்கு ஸம்வாதமாக ஒரு பாசுரம் காட்டுகிறார். ‘அடைந்த அருவினையோடு அல்லல் நோய் பாவம் மிடைந்தவை மீண்டொழிய வேண்டில் நுடங்கிடையை முன்னிலங்கை வைத்தான் முரணழிய முன்னொரு நாள் தன்வில் அங்கை வைத்தான் சரண்’[2] அடைந்த அருவினை – நெருப்போடே சேர்ந்த இரும்பு அதன் குணத்தை (நிறம், ஒளி, ஔஷ்ண்யம்) அடைவது போல நித்யமான ஆத்ம வஸ்து அநாதியாய் உள்ள அசித் ஸம்பந்தத்தால் அசித்தாகிற சரீரத்தையே தான் என்று நினைத்திருக்கிறது. இது அவித்யா என்கிற அஞ்ஞானம். இதற்குக் காரணம் கர்மம், வாஸனை, ருசி. இவைகளே அருவினை. அழிக்க அரிதானபடியால் அருவினை எனப்பட்டது. அருவினையால் சரீரஸம்பந்தம் உண்டாகிறது. சரீர ஸம்பந்தத்தால் அல்லல், நோய், பாவம் ஏற்படுகின்றன. அல்லல் மனத்துன்பம். இது आधि எனப்படும். நோய் சரீரத்தில் ஏற்படும் வ்யாதி. இந்த சரீரங்கொண்டு செய்யப்படும் பாவ புண்ணியங்கள் பாவம் எனப்பட்டது. முன் செய்த வினைகள் அருவினை என்று சொல்லப்பட்டுவிட்டது. இவைகளெல்லாம் மிடைந்து ஒன்றோடொன்று கலந்து தொடர்ந்து காரிய காரணங்களாகத் தொடர்கின்றன. அவை (மீண்டொழிய வேண்டில்) அடியோடு ஒழிக்க வேண்டுமானால் பிரபலமான வினைகளையும் எளிதில் போக்க வல்லவனைப் பற்றவேண்டும். அவன் யாரெனில் (நுடங்கிடையை) துவளுகிற இடை. பெருமாளைப் பிரிந்த பிராட்டியைப் பார்த்தவர்கள் இவ்வளவு மெல்லிய இடையை உடைய இவளுக்கு

---

1. ரா.ஸு. 22.20 2. முதல் திரு. 59

என்ன நேருமோ என்று பயப்படும்படி துவளும் இடை. இத்தகைய பிராட்டியை (முன்னிலங்கை வைத்தான்) முன்னொரு காலத்தில் இலங்கையில் கொண்டு போய் சிறை வைத்த ராவணனுடைய (முரணழிய) வலிமை தொலையும்படி (முன்னொரு நாள்) ஒரு காலத்தில் (தன்வில்) சார்ங்கம் என்னும் தன்வில்லை (அங்கை வைத்தான்) கையிலே ஏந்தினான். இவன் அம்புகளைத் தொடுக்கவும் வேண்டா. வில்லேந்தி நின்றதுவே எதிரிகளை மண்ணுண்ணப் பண்ணும். அப்படிப்பட்ட ராமபிரானை (மிடைந்தவை மீண்டொழிய வேண்டில் சரண்) சரணடையுங்கள். அல்லது அவனே சரணமாவான். அவனையே உபாயமாகப் பற்றுங்கள். அவன் ஒருவனே உபாயமாவான். எம்பெருமானுக்கே அடிமைப்பட்ட இவ்வாத்மாவை தன்னுடையதாக நினைத்திருப்பது பிராட்டியைப் பிரித்த ராவணனுடைய செயலோடொக்கும். பிராட்டி பிரானோடு சேர்ந்திருப்பதற்குத் தடையாயிருந்த ராவணனைப் போக்கினாற் போல, தன்னை உபாயமாகப் பற்றினவர்கள் தன்னை அடைவதற்குத் தடையாயிருப்பவைகளைத் தானே அகற்றுவான் என்று கருத்து. பிராட்டிக்குப் பெருமாளோடுள்ள உறவு நமக்கும் உண்டு என்பதை உணர்த்தவும் அவளுடைய புருஷகாரம் கட்டாயம் வேண்டியது என்று காட்டவும் 'நுடங்கிடையை' என்று தொடங்கி அவளைப் பற்றி பேசுகிறார்.

பிரமனைத் தோற்றுவித்ததையும் ராவணனை அழித்ததையும் பேசினார். இதற்குக் கருத்து ஸ்ருஷ்டியின் ஆரம்பத்தில், இல்லை என்று சொல்லலாம்படி இருந்த ப்ரபஞ்சம் முதலியவற்றைப் படைத்த உனக்கு, ஏற்கனவே உள்ள எனக்குப் பெருமை சேர்த்தல் முடியாததில்லை. பிராட்டியின் ஸம்ச்லேஷத்திற்குத் தடையாயிருந்த ராவணனை அழித்த உனக்கு என் தடைகளைப் போக்குவது அரிதல்ல.

அடுத்து வாமன வ்ருத்தாந்தம். ராவணனை அம்பாலே அழித்தான். அவ்வாறு அம்பாலே அழிக்கமுடியாதவன் மாவலி. அவனுடைய ஔதார்யம் அவனுக்குக் கேடயமாய் இருந்தது. அம்பாலே அழிக்க முடியாத அவனை அழகாலேயும் உதாரனான அவனைத் தன் இரப்பாலும் வசப்படுத்தினான். ஆகையால் அந்த வ்ருத்தாந்தத்தைக் கூறுகிறார். ப்ரயோஜநாந்தரபரரான இந்த்ராதிகளுக்கு இத்தனை செய்த நீ, உன்னையே ப்ரயோஜனமாக நினைத்திருக்கும் எனக்குச் செய்யாயோ என்கிறார்.

**மூவடி நானிலம் வேண்டி, முப்புரி நூலொடு மானுரியிலங்கு, மார்வினின் இருபிறப்பு ஒரு மாணாகி, ஒருமுறைஈரடி மூவுலகளந்தனை**

ஒருமுறை – ஒரு காலத்தில், முப்புரி நூலொடு – பூணூலோடு, மானுரி – மான்தோல், இலங்கு – விளங்கும், மார்வினின் – மார்பை உடைய, இருபிறப்பு ஒரு மாணாகி – ஒப்பற்ற ப்ராஹ்மண ப்ரஹ்மசாரியாகி மாவலியிடம் சென்று, நானிலம் – பூமியில், மூவடி – மூன்று அடி நிலத்தை, வேண்டி – யாசித்து, ஈரடி – இரண்டு திருவடிகளாலே, மூவுலகு – மூன்று உலகங்களையும், அளந்தனை – அளந்து கொண்டாய் என்று அந்வயம்.

வாமனன் மூவடியை ஏன் இரந்தான். ஈரடியாலே அளக்கமுடிந்தபோது மூன்றாம் அடி கேட்டது மாவலியைச் சிறை வைக்க எண்ணி. 'ஒரு குறளாய் இரு நிலம் மூவடிமண் வேண்டி உலகனைத்தும் ஈரடியால் ஒடுக்கி ஒன்றும் தருகவெனா மாவலியைச் சிறையில் வைத்த தாடாளன்''[1] மாவலியைச் சிறையில் வைக்கவே மூன்றாம் அடி வேண்டியது. (நானிலம்) நான்கு வகைப்பட்ட நிலம். முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் என்பன அவை. காடும் அதைச் சார்ந்ததும் முல்லை. மலையும் அதைச் சார்ந்ததும் குறிஞ்சி. நாடும் அதைச் சார்ந்ததும் மருதம். கடலும் அதைச் சார்ந்ததும் நெய்தல் என்பர். 'அன்னலும் துன்னலுமான பூமியை' என்பது இங்குள்ள வ்யாக்யான ஸூக்தி. அஸாரமும் அல்பஸாரமுமான பூமியில். பாலை என்பது ஒன்றுண்டே. நானிலம் என்பது எப்படியெனில், பாலை என்றொரு தனிநிலமில்லை. 'முல்லையும் குறிஞ்சியும் முறைமையில் திரிந்து பாலை என்பதோர் படிவங்கொள்ளும்' என்பர் தமிழர். நம்மாழ்வாரும் ''நானிலம் வாய்க்கொண்டு நன்னீரமென்று கோதுகொண்ட வேனிலஞ்செல்வன் சுவைத்துமிழ் பாலை''[2] என்றார். அதாவது கடும் வெய்யில் முதலியவற்றால் இந்த நால்வகை நிலங்களும் தங்கள் தன்மை கெட்டுப் பயனற்றுப் போம்போது அதுவே பாலை எனப்படும். அக்கருத்திலேயே கலியனும் நானிலம் என்றார். கிரி, வனம், த்வீபம், சமுத்ரம் எனப்பட்ட நாலுவகை பூமி என்றும் சொல்லுவர். (முப்புரி...மார்வினின்) மேகத்திலே மின்னல் மின்னினாற்போலே திருமார்பிலே யக்ஞோபவீதமும் மான்தோலும் விளங்க இருந்தான். (இரு பிறப்பு) அப்போதே உபநயனமாகி இருபிறப்பாளனாக ஆன தோற்றம். (ஒரு மாண்) ஒப்பற்ற ப்ரஹ்மசாரி. அவனே மற்றுமொரு தடவை இந்த வேஷம் கொள்ள நினைத்தாலும் இப்படி அமையாது. (ஒருமுறை ஈரடி மூவுலகளந்தனை) ஒரு தடவை இரண்டடிகளாலே மூன்று உலகங்களையும் அளந்தவனே. இங்கே வ்யாக்யான ஸ்ரீஸூக்தி– இந்த்ரனுடைய அர்த்தித்வம் தலைக்கட்டுகைக்காக, இட்டபோதோடு இடாத போது வாசியற, முகமலர்ந்து போம்படி இரப்பிலே தகணேறின வாமன வேஷத்தை பரிக்ரஹித்து.

1. பெரி. திரு. 3.4.1. 2. திருவிருத். 26

இந்த சரித்ரத்தைச் சொன்னதின் தாத்பர்யம் இழந்துபோன ராஜ்யத்தை இந்த்ரனுக்கு மீட்டுக் கொடுத்தாப்போலே நான் இழந்துபோன சேஷத்வத்தை மீட்டுத் தரவேண்டும். 'ஈட்டங்கொள் தேவர்கள் சென்றிரந்தார்க்கு இடர்நீக்கிய கோட்டங்கை வாமனன்'[1] என்றார் நம்மாழ்வார். கூட்டங்கூட்டமாக தேவர்கள் சென்றிரக்க, அவர்கள் துன்பம் போக்குவதற்காக இவனும் இரப்பாளனானான். அவன் இரந்தது அஸாரமான மண் (ராஜ்யம்). நான் என்னையும் உன்னையும் அல்லவோ இழந்து நிற்கிறேன். मदीयमूर्द्धानं अलंकरिष्यति - कदा[2] என்றல்லவோ நானிருப்பது. இந்த்ரன் ராஜ்யம் வேண்டினான். மஹாபலி தான் உதாரன் என்ற புகழை விரும்பினான். இருவரும் உன்னை விரும்பவில்லை.

மேலே கஜேந்த்ர வ்ருத்தாந்தம் அருளிச் செய்கிறார். சிறந்த அறிவும் வலிமையும் உடைய இந்த்ரன் முதலானோருக்குத் தான் தன்னைத் தாழ்த்திக் கொண்டாவது கார்யம் செய்வானோ என்னில், இல்லை. ஆபத்தும் விஸ்வாஸமும் சிறிது உண்டானாலும் தாழ்ந்தவர்க்கும் அவரிருக்குமிடம் ஓடிச்சென்று கார்யம் செய்தான் என்கிறார்.

**நால்திசை நடுங்க அஞ்சிறைப் பறவை யேறி நால்வாய் மும்மதத்து இருசெவி ஒருதனி வேழத்து அரந்தையை ஒருநாள் இருநீர் மடுவுள் தீர்த்தனை**

ஒருநாள்– ஒரு காலத்தில், நால்திசை நடுங்க – நாலு திக்கிலும் உள்ள ஜனங்களெல்லாம் நடுங்கும்படி, அஞ்சிறைப் பறவையேறி – அழகிய சிறகையுடைய கருடன் மீது ஏறி, நால்வாய் – தொங்குகின்ற வாயையும், மும்மதத்து – மூன்று இடங்களில் மதநீர் பெருக்கையும், இருசெவி – இரண்டு காதுகளையும் உடையவனாய், ஒருதனிவேழத்து – துணையற்றவனாயும் ஒப்பற்றவனாயும் உள்ள கஜேந்த்ரனின், அரந்தையை – துன்பத்தை, இருநீர் மடுவுள் – ஆழமான நீரையுடைய மடுவின் கரையிலே வந்து, தீர்த்தனை – போக்கியருளினாய்.

(நால்திசை நடுங்க) கஜேந்த்ரனுடைய ஆபத்தை நினைத்து கலங்கின கலக்கத்தைக் கண்டு உலகத்திற்கு என்ன கேடு வரப் போகிறதோ என்று நான்கு திசைகளிலும் உள்ள தேவர், மனிதர் முதலானோர் நடுங்கும்படி. எம்பெருமானுக்கு சீற்றம் இயல்பானதன்று. ஜகத்ஸ்ருஷ்டியை ஸங்கல்பத்தாலேயே செய்த அவனுக்கு ஸம்ஹாரமும் ஸங்கல்பத்தாலேயே செய்ய முடியும். அப்படியிருக்க, இந்த சீற்றத்தின் பயனாக என்ன விளையப் போகிறதோ என்று அஞ்சினார்கள்.

1. திருவாய். 7.5.6 2. ஸ்தோத்திர ரத்னம். 31

(அஞ்சிறைப் பறவையேறி) மிக்க அழகையும் வேகத்தையும் உடைய சிறகையுடைய பெரிய திருவடியின் தோள்களிலே ஏறிக்கொண்டு, (நால்வாய்....அரம்பையை) தொங்கும் வாயையும் மூவிடங்களில் மதத்தையும் இரண்டு செவிகளும் உடையதாய் (ஒரு தனி வேழம்) துணையற்று தன் பலம் முழுவதும் அழிந்து போக்கற்ற நிலையில் ஒப்பற்றதான யானையின் துயரத்தை (ஒருநாள் இருநீர் மடுவுள்தீர்த்தனை) ஒப்பற்ற காலம். எம்பெருமானையே ஓடிவரச் செய்ய அக்காலமும் ஒரு காலமே என்று கொண்டாடுகிறார். யானைக்கு வேற்று நிலமாய் முதலைக்குத் தந்நிலமானமடு. அதுவும் இருநீர் மடு. மிகுந்த நீரையுடைய மடு. முதலை கவ்வின யானையைக் காத்தாற் போலே ஸம்ஸாரம் கவ்வின என்னையும் காக்கவேண்டும் என்பது கருத்து. गज आकर्षते तीरे ग्राह आकर्षते जले तयोर्द्वन्द्वसमं युद्धं दिव्यं वर्ष शहस्रकम्[1] தேவ வருஷங்களிலே ஆயிரம் வருஷம் போர் நடந்தது என்கிறார். ஆனைக்கு முதலை ஒன்று. எனக்கு ஐந்து. ஆனை ஆயிரம் ஆண்டுகள் போரிடும் வல்லமை உடையது. நானோ துர்பலன். ஸ்வாமி தேசிகன் गजेन्द्र रक्षा त्वरितं भवन्तं ग्राहैरिवाहं विषयैः विकृष्टः[2] என்றார். பெரியாழ்வாரும் 'ஒப்பிலேனாகிலும் நின்னடைந்தேன் ஆனைக்கு நீ அருள் செய்தமையால்'[3] என்றார்.

யானையின் துயரத்தைப் போக்கியது எப்படியெனில் – மடுவில் தான் புகுந்து யானையையும் முதலையையும் அணைத்துக் கொண்டு, கரைக்குக் கொண்டு வந்து யானையின் கால் நகத்திற்கும் தீங்கு வராதபடி, சக்கரத்தால் முதலையை கீறிக்கொன்றான். அடியனான யானையை அணைத்துக் கொண்டு வந்தது சரி. ஆனால் ஆச்ரித விரோதியான முதலையையும் அணைத்துக்கொள்ள வேண்டுமோ என ஒருவர் கேட்க பட்டர் அருளிச் செய்தாராம் 'ராஜபுத்ரனோடு வினையுண்ட கைக்கூட்டனுக்கும் பால்திரளை இடக்கடவது காண்' என்று. அதாவது ராஜபுத்ரனுக்கு மல்யுத்தப் பயிற்சி அளிப்பதற்காக அவனோடு தினந்தோறும் கைகலந்து சண்டையிடும் கைக்கூட்டனுக்கும் பால்சோற்று உருண்டை கொடுத்து வளர்த்தது போல ஆச்ரிதனான கஜேந்த்ரனோடு சண்டையிட்டான் என்பதற்காக முதலைக்கும் பகவானால் அணைக்கப்படும் பேறு கிடைத்தது. யானையைக் குறிக்க நால்வாய், மும்மதம், இருசெவி என்றெல்லாம் வர்ணிக்க வேண்டியது ஏன் என்னில், 'ப்ரஜை கிணற்றிலே விழுந்தால், காதும் கண்டவாளியும் காலும் தலையும், வடிவும் இருக்கும்படி காண்' என்பாரைப் போல இடர்ப்பட்ட இதனுடைய அவயவங்களும் ஆகர்ஷகமானபடியாலே சொல்லுகிறது. எளியார் பட்ட நோவு போலன்று இதனுடைய நோவு. உருவம் பெரியது போலவே நோவும் பெரியது. परमापदमापन्नः[4] எம்பெருமானும் தன் பெருமையைப் பாராமல் மடுவின்

1. வி.தர். 69. 46 2. அஷ்டபுஜாஷ்டகம் 3. பெரியா. திரு. 4.10.1 4. வி.தர். 69.47

கரைக்கு ஓடிவருமளவுக்குப் பெரிய ஆபத்து. मनसा चिन्तयन् हरिम् என்ற ரிஷி வாயாலும் அழைக்கமுடியாத தசையிலே அது இருந்தது எனக் காட்டினார். எம்பெருமானுடைய திருவுள்ளம் எதைச் சொன்னால் பதறும் என்பதை நன்கறிந்த ஆண்டாள் கூறுகிறாள், 'காலைக்கது விடுகின்ற கயலொடு வாளை விரவி'[1] என்று. ஒரு நீர்ப்பூச்சியாலே இடருண்ட யானையைக் காக்க ஓடிவந்த நீ கயலும் வாளையுமாகிற இரண்டு நீர்ப்பூச்சிகளாலே நலிவுபடும் எங்களுக்கு சிக்கெனக்கூறை தரலாகாதோ என்கிறாள்.

கீழே 'வாளியின் அட்டனை' என்பதாலே அந்தரங்கையான பிராட்டிக்கு உதவியதையும் 'மூவுலகளந்தனை' என்பதால் ப்ரயோஜநாந்தரபரர்க்கு உபகாரம் செய்ததையும் 'மடுவில் தீர்த்தனை' என்பதால் அநந்ய ப்ரயோஜனனாய் அநந்ய கதியான கஜேந்திரனுக்கு அருளியதையும் கூறினார். மேலே உபாயாந்தரங்களைப் பற்றினவர்க்கு அதைத் தலைக்கட்டி வைப்பவன் என்கிறார். ஸஹஸ்ர நாமத்தில் योगो योगविदां नेता என்ற திருநாமங்களை இவ்வாறு விளக்குவர். योगः ஆச்ரிதர்கள் தன்னைச் சேரும்படி உபாயமாய் இருப்பவன். योगविदां नेता உபாயாந்தரங்களைப் பற்றி இருப்பவர்க்கும் அவற்றை நடத்திக் கொடுப்பவன். வேறான உபாயங்களில் முதலாவதான கர்மயோகத்தை அநுஷ்டிப்பார்க்குத் தலைக்கட்டித் தருமவன் என்கிறார் மேலே.

**முத்தீ நான்மறை ஐவகை வேள்வி, அறுதொழில் அந்தணர் வணங்கும் தன்மையை**

ப்ராஹ்மணோத்தமர்களைப் பேசுகிறார். 'மறைப் பெருந்தீ வளர்த்திருப்பார் வருவிருந்தை அளித்திருப்பார் சிறப்புடைய மறையவர்'[2] என்றார் பெரியாழ்வார். மறையிலே கூறப்பட்ட அக்நிகள் மூன்று. கார்ஹபத்யம், ஆஹவநீயம், தக்ஷிணாக்நி என்பவை அவை. இவை மூன்றும் பெருந்தீ. விறகிட்டு எப்போதும் பாதுகாக்க வேண்டியவை. பெரும்பசியுள்ள மூன்று பிள்ளைகளை ஒரே பிரஸவத்தில் பெற்ற தாய் அப்பிள்ளைகளுக்குச் சோறிட்டு வளர்க்க எத்தனை கஷ்டப்படுவளோ, அவ்வளவு கஷ்டப்படவேண்டும் இந்த மூன்று அக்நிகளை ரக்ஷிப்பதற்கு. கர்மயோகத்தை சரிவர அநுஷ்டிப்பதற்கு அங்கமாக (நான்மறை) ரிக், யஜுஸ், ஸாம, அதர்வணம் என்ற நான்கு வேதங்களையும் அத்யயனம் பண்ணியிருக்க வேண்டும். (ஐவகை வேள்வி) தேவயக்ஞம், பித்ருயக்ஞம், பூதயக்ஞம், ப்ரஹ்மயக்ஞம், மநுஷ்ய யக்ஞம் என்ற பஞ்சமஹாயக்ஞங்களை நாள்தோறும் அநுஷ்டிப்பவர்களாயும் உள்ள அந்தணர். அவர்கள் (அறுதொழில்)

1. நாச்சி. திரு. 3.5 2. பெரியா. திரு. 4.8.2

ஆறு தொழில்களைச் செய்பவர்கள். அவையாவன अध्ययनं अध्यापनं यजनं याजनं दानं प्रतिग्रहः என்பன. ப்ராஹ்மணர் மட்டுமே இந்த ஆறு தொழில்களைச் செய்யக் கூடியவர். ஆக ப்ராஹ்மணராயிருந்து அத்யயன ஸம்பத்தும் ச்ரௌத ஸ்மார்த்த கர்மாநுஷ்டான ஸம்பத்தும் உடையவர்கள் குறிக்கப்பட்டார்கள். இது ஞானத்தோடு கூடின கர்மயோகிகளைக் குறிப்பதாகும். (அந்தணர் வணங்கும் தன்மையை) இந்தக் கர்மயோகத்தால் உன்னைப் பெற விரும்பி உன்னை ஆச்ரயிக்கும் ப்ராஹ்மணோத்தமர்கள் ஆராதிக்கும் தன்மையை உடையவன் என்கிறார். இங்கு பெரியவாச்சான் பிள்ளையின் ஸ்ரீஸூக்தி– உபாயாந்தர நிஷ்டர்க்கும் அவற்றை நடத்திக் கொடுப்புதியிரே. இங்கே கர்மயோகம் அநுஷ்டிப்பவரை உபாயாந்தர நிஷ்டர் என்கிறார். அதாவது எம்பெருமானைத் தவிர வேறொரு உபாயத்தைப் பற்றினவர்கள் என்று பொருள். ஒரு பயனுக்கே இரண்டு உபாயங்கள் இருக்குமாயின் ஒன்று மற்றொன்றுக்கு உபாயாந்தரம் ஆகும். அப்போது விகல்பத்துக்கு இடமுண்டு. அப்படி சாஸ்திரங்களில் சொல்லப்படவில்லை. எம்பெருமானைப் பெறுவிக்கும் உபாயங்கள் இரண்டு வகையாய் இருக்கும். ஒன்று ஸித்தம் (ஏற்கனவே உள்ளது). மற்றது साध्यं. இனி ஏற்படப் போவது. இவையிரண்டும் ஒரே வகையானதே. ஒன்றுக் கொன்று முரண்பட்டதில்லை. எம்பெருமானாகிய ஸித்தோபாயத்தை வசப்படுத்துவதுதான் ஸாத்யோபாயமான பக்தி ப்ரபத்திகள். அவைகளாலே பகவத்ப்ரஸாதம் பிறந்து நிக்ரஹ ஸங்கல்பம் போய் மோக்ஷமாகிற பலனைப் பெறுகிறான் என்பது தான் शास्त्र மர்யாதை. இங்கு கூறப்படும் கர்மயோகம் எம்பெருமானைப் பெற சாக்ஷாத் உபாயம் என்பது ராமாநுஜ ஸித்தாந்தம் இல்லை. கர்மயோகத்தாலே பாபம் கழிந்து சித்தசுத்தி முதலானவை ஏற்பட்டு ஞானயோகத்திலே மூட்டும். கர்மஞான யோகங்களாலே பக்தியோகம் நிறைவு பெறும். அப்படி நிறைவுபெற்ற பக்தியோகத்தாலே பகவானுடைய நிக்ரஹஸங்கல்பம் போய் ப்ரஸாதம் உண்டாகி அவனே மோக்ஷத்தைத் தருகிறான் என்று சாஸ்திரம் சொல்லுகிறது. ப்ரபத்தி நிஷ்டனுக்கும் பக்தியோகஸ்தானத்திலே நிற்கும் ப்ரபத்தியாலே பகவத்ப்ரஸாதம் உண்டாகிறது. ஆக இருவருக்குமே மோக்ஷத்தைத் தருபவன் எம்பெருமானே. அவன் ஒருவனே மோக்ஷோபாயன். பக்தி ப்ரபத்திகள் இரண்டுமே பகவந் நிக்ரஹ ஸங்கல்பத்தைப் போக்கி அவனுக்குப் ப்ராஸாதத்தை (கனிவை) உண்டாக்குவதற்கு சாதனங்களேயன்றி, மோக்ஷத்திற்கு சாக்ஷாத் உபாயங்கள் அல்ல. மேலும், பக்தியோக நிஷ்டனும் பக்தியோகம் நிறைவு பெறுவதற்காக பகவத் ப்ரபத்தி பண்ணவேண்டும். நிலைமை இப்படியிருக்க 'தன்முயற்சியில் பற்று



திருக்கார்த்திகையில் அவதரித்த ஸ்ரீ கலியன்
ஸ்ரீ குமுதவல்லி நாச்சியாருடன் – திருவாலி திருநகரி

அறாமையால், உபாயமல்லாத உபாயாந்தரங்களில் உபாயபுத்தி வைத்து, அவனோடு கூட அவற்றையும் உபாயமாகப் பற்றுவார்க்கும் அவர்கள் வழியே சென்று ஒவ்வோர் அடியிலும் அவ்வுபாயங்களைத் தலைக்கட்டி வைத்து அவர்கள் விரும்பும் பயனை அளிக்கும் பெருமையைப் பேசுகிறார்' என்ற அவதாரிகை எந்த அளவு பொருத்தம் என்பதை பராமர்சிக்க வேண்டும். பின் கர்மயோகத்தைப் பற்றிக் கூறியது ஏன் எனில், பகவானைப் போன்ற ஒரு உபாயம் என்பதால் கூறவில்லை. கர்மயோகமும் பரம்பரையா பகவத் ப்ராப்தியைப் பண்ணுவிக்கும் என்பதாலும், कर्मणैव हि संसिद्धि आस्थिता जनकादयः[1] என்றபடி கர்ம யோகத்தை ஸாதனமாகக் கொண்டு பயன் பெற்றாருண்டு என்று கீதையில் கண்ணன் அருளிச் செய்வதாலும் மேலே அடுத்து சொல்லப்போகும் பக்தி யோகத்துக்கு இது அங்கமாகையாலும் கர்மயோகத்தைச் சொன்னார் என்பது பொருந்தும். இவரே அடுத்ததாக 'கர்மயோகத்தை அங்கமாக உடைத்தான உபாயம் சொல்லப்படுகிறது' என்று அவதாரிகையிடுவதாலும் மேலே சொன்னது அவர் திருவுள்ளத்துக்கும் பொருத்தமானதே.

இனி, கீழே சொல்லப்பட்ட அங்கமான கர்மயோகத்தால் அடையப்படுவதாய், இதைக்காட்டிலும் செய்வதற்குக்கடினமானதாய், ஸம்ஸார பீதரான முமுக்ஷுக்கள் அநுஷ்டிக்கும் பக்தியோகத்தால் அறியப்படுபவன் என்கிறார்.

**ஐம்புலன் அகத்தினுட்செறுத்து, நான்குடனடக்கி முக்குணத்து இரண்டவையகற்றி, ஒன்றினில் ஒன்றி நின்று, ஆங்கு இருபிறப் பறுப்போர், அறியும் தன்மையை**

ஐம்புலன்— செவி, வாய், கண், மூக்கு, உடல் என்ற ஐந்து இந்திரியங்களை, அகத்தினுட்செறுத்து – வெளியில் பட்டிமேயாதபடி உள்ளே அடக்கி, நான்கு உடனடக்கி – உண்ணல், உறங்கல், அஞ்சல், விஷயபோகம் என்ற நான்கையும் ஒன்று சேர இல்லாமல் செய்து, முக்குணத்து – ஸத்வ, ரஜஸ், தமஸ் என்ற மூன்று குணங்களில், இரண்டவையகற்றி – ரஜஸ்ஸையும், தமஸ்ஸையும் விலக்கி, ஒன்றினில் – ஸத்வ குணம் ஒன்றிலேயே, ஒன்றிநின்று – பொருந்தியிருந்து, ஆங்கு – அப்படிப்பட்ட பக்தி யோகத்தால், இருபிறப்பறுப்போர் – இருவகையான பிறப்புகளை நீக்கிக் கொள்ள வல்ல உபாஸகர்களாலே, அறியும் தன்மையை— அறியப்படும் ஸ்வபாவத்தை உடையை.

---

1. கீதை 3.20

(ஐம்புலன்... செறுத்து) கண் முதலிய புலன்களை அவற்றின் விஷயங்களான ஸப்தாதிகளிலே போகாமல் தடுத்து அடக்கி (நான்குடனடக்கி) உள்ளிந்திரியமான மனதிற்கு நான்கு நிலைகள் உண்டு. அவை மனம், புத்தி, சித்தம், அஹங்காரம் எனப்படும். நெஞ்சு மனனம் செய்யும் போது –நினைத்துப் பார்க்கும் போது – மனம் எனப்படும். அறியும் போது புத்தி எனப்பெயர் பெறும். சிந்திக்கும் போது சித்தம் என்றும் அஹங்கரிக்கும் போது அஹங்காரம் என்றும் அதைக் கூறுவர். மனதில் இந்த நான்கு நிலைகளையும் ஒன்று சேர அடக்கி. ஆக, வெளி உள் புலன்கள் அனைத்தையும் அடக்குவதாகிற செயற்கரிய செயலைச் செய்யவேண்டும் இவர்கள். அல்லது ஆஹார நித்ரா பய மைதுனங்களைத் தவிர்த்து அல்லது नित्यानित्यवस्तु विवेकः, शमदमादि साधन संपत्, इहामुत्रफल भोगविरागः, मुमुक्षुत्वं என்கிற ஸாதன சதுஷ்டயத்தை உடையவராய், (முக்குணத்து...நின்று) முக்குணங்களில் இரண்டைத்தவிர்த்து ஸத்வத்தில் ஊன்றி நின்று பக்தி யோகத்தால் (இருபிறப்பறுப் போர்) புண்ய பாபங்களால் வரும் ஸம்ஸாரம். அதைப் போக்கிக் கொள்பவர். அவர்களால் அறியப்படுபவன்.

‘இப்படியிருந்த யோகத்தாலே அநுபவிக்கையாவது ஸ்ரீ கஜேந்த்ராழ் வானுடைய மிடுக்குள்ள தசையோடொக்குமத்தனை. ஆனபின்பு அவனையே உபாயமாகப் பற்றிப் பிழைக்க வேண்டும். ஸாதனாந்தர பரிக்ரஹம் பண்ணினார் உன்னைப் பெற்றுப் போகா நிற்க உன்னையே ஸாதனமாகப் பரிக்ரஹித்த நான் உன்னைப் பெறாதே போவதே’ என்பது பெரியவாச்சான் பிள்ளை ஸ்ரீ ஸூக்தி.

கீழே உபாஸகர்களால் அறியப்படும் குணங்களை உடையை என்றார். உபாஸகர் அறியும் அளவேயோ அவன் குணங்கள் எனில், இல்லை. இந்த உபாஸகர்களைக் காட்டிலும் அதிகமான ஞானசக்திகளை உடையவராலும் அறிய முடியாத பெருமையை உடையவன் என்கிறார்.

**முக்கண் நால்தோள் ஐவாயரவோடு, ஆறுபொதி சடையோன் அறிவரும், தன்மைப் பெருமையுள் நின்றனை**

கண் பிறவற்றை அறிவதற்கு ஸாதனமானபடியால் ஸ்வாபதேசத்தில் ஞானத்தைக் கண் என்பர். மூன்று கண்களையுடையவனாகையாலே தன்னை அதிக ஞானமுள்ளவனாக நினைத்திருக்கும் ருத்ரன். ईश्वरात् ज्ञानमन्विच्छेत्[1] என்று சொல்லுகிறபடி மற்றவர்க்கு ஞானத்தைத் தருபவன் ருத்ரன். அப்படிப் பட்டவனாலும் அறியப்படாத ஸ்வபாவம் உடையவன் என்ற பெருமை எம்பெருமானுடையது என்கிறார். (முக்கண்) கண்கள் அதிகமாயிருப்பது ஞானத்தின் மிகுதியைக் குறிக்கிறது. (நால்தோள்) எம்பெருமானுக்குள்ளது போல்

1. மாத்ஸ்ய. புரா. 87.41

தானும் நான்கு தோள்களைக் கொண்டான். (ஐவாயரவோடு ஆறுபொதி சடையோன்) ஐந்து வாய்களையுடைய பாம்பையும் கங்கையாற்றையும் சடையின் ஒரு பாகத்திலே அடக்கிக்கொண்டவன். இப்படிப்பட்டவனும் (அறிவு அரும்) அறிவதற்கு அரிதான (தன்மை) ஸ்வபாவமாகிற (பெருமையுள் நின்றனை) பெருமையையுடையை. பெருங்கிழாயென்ன ருத்ராதிகள் நிலை இதுவானால் க்ஷுத்ரரான எங்களுக்குப் பெற விரகுண்டோ. நீயே விஷயீகரிக்க வேணுமென்று கருத்து.

இந்த ருத்ராதிகளையும் மற்றவற்றைப் போலே ப்ரளயம் கொண்டபோது உதவினவர் யார், நீயே அல்லவோ என்கிறார் மேலே.

**ஏழுலகு எயிற்றில் கொண்டனை**

ப்ரளயம் வந்த போது தங்களைப் பெரியோர்களாக நினைத்திருந்த ருத்ராதிகளோ காப்பாற்றினார்கள். அவர்கள் தங்களைக் காத்துக்கொண்டால் அல்லவோ மற்றவர்களைக் காப்பதற்கு. 'நெற்றிமேல் கண்ணானும் நிறைமொழிவாய் நான்முகனும் நீண்ட நால்வாய் ஒற்றைக்கை வெண்பகட்டின் ஒருவனையும் உள்ளிட்ட அமரரோடும் வெற்றிப் போர்க் கடலரையன் விழுங்காமல் தான் விழுங்கி உய்யக் கொண்ட'[1] என்று கலியனும், 'இந்திரனும் ஏறுயர்த்த ஈசன்தானும், ஈரிரண்டு முகத்தானும் இல்லாவந்நாள்'[2] என்று ஸ்வாமி தேசிகனும் குறித்தபடி அவர்கள் இருந்தாலன்றோ காப்பதற்கு. ப்ரளய ஸமுத்ரத்தில் மூழ்கி அண்டகடாஹ பித்தியில் ஒட்டிக் கிடந்த பூமியை வராஹ ரூபியாய் சென்று பெயர்த்தெடுத்து தம்முடைய கோரைப்பல்லின் நுனியில் கொண்டவன். ப்ரளயக் கடலில் மூழ்கிய பூமியை உத்தரித்தாற் போலே ஸம்ஸாரக் கடலில் அழுந்திக் கிடக்கும் என்னையும் கைதூக்கிவிட வேண்டும் என்று கருத்து.

**கூறிய அறுசுவைப் பயனுமாயினை**

இவ்வுலகில் வாழும் மனிதர்களுக்கு ப்ரயோஜனமாக அறுசுவைகள் சாஸ்த்ரங்களில் கூறப்பட்டன. அந்த ரஸங்களாயிருப்பவன் எம்பெருமான். நம்மாழ்வார் எம்பெருமானை 'அறுசுவை அடிசில் என்கோ'[3] என்றார். ஷட்ரஸோபேதமான அன்னமாயிருந்து அவரவர் விரும்பும் பயனை அளிப்பது போல் அறுசுவை அடிசிலான உன்னைத் தரவேண்டும் என்கிறார். தமக்கு அறுசுவை அடிசிலாயிருப்பது பஞ்சாயுதங்களும் அவற்றை ஏந்திய திருக்கைகளுமே என்கிறார் மேலே.

---

1. பெரி.திரு. 11.6.3 2. தேசிகப்ர. பரமபதஸோபானம் 7 3. திருவாய் 3.4.5

**சுடர்விடும் ஐம்படை அங்கையுளமர்ந்தனை சுந்தரநால் தோள் முந்நீர் வண்ண**

(சுடர்விடும் ஐம்படை) தேஜஸ்ஸை உமிழும்படியான ஐந்து ஆயுதங்கள், 'கோலார்ந்த நெடுஞ்சார்ங்கம் கூனற்சங்கம் கொலையாழி கொடுந்தண்டு கொற்ற வொள் வாள்'[1] எனப்பட்டவை. (அங்கை) ஆயுதங்கள் எம்பெருமானுக்கு ஆபரணமாகவும் விளங்குபவை. இவையில்லாத போதே த்ருஷ்டி பரிஹாரார்த்தமாக கண்ணெச்சில் படாதபடி ஆலத்தி வழிக்கும்படி இருப்பன கைகள். அவற்றிலே இவற்றைத் தரித்தவன். (சுந்தரநால்தோள்) அழகை வகுத்தது போன்ற நான்கு தோள்களை உடையவன். (முந்நீர்வண்ண) முந்நீரையுடைய கடல் போன்ற நிறத்தையும் ஸ்வபாவத்தையும் உடையவனே. இவ்வடிவழகை என்னைப் பூரணமாக அநுபவிக்கச் செய்ய வேண்டும் என்று கருத்து.

இவ்வநுபவத்தைப் பெறுவதற்கு எனக்குப் புருஷகாரமுண்டென்கிறார் மேலே.

**நின்னீரடி ஒன்றிய மனத்தால் ஒரு மதிமுகத்து மங்கையரிருவரும் மலரன அங்கையின் முப்பொழுதும் வருட அறிதுயிலமர்ந்தனை**

நின் திருவடியிணையில் பொருந்திய மனத்தையுடையவர்களாய் அதனாலே சந்திரன் போலே மலர்ந்த முகத்தை உடையவர்களாய் (ஒருமதி) ஒப்பற்ற சந்திரன் – களங்கம் நீங்கினவன். அப்படிப்பட்ட (மங்கையரிவரும்) பெரிய பிராட்டியாரும் பூமிப் பிராட்டியாரும். 'வடிவிணையில்லா மலர்மகள், மற்றை நிலமகள் பிடிக்கும் மெல்லடி'[2] என்றார் நம்மாழ்வார். இவர்கள் மதிமுகத்தின் அழகிலே மயங்கின எம்பெருமானை 'பார்வண்ண மடமங்கைபத்தர் பித்தர் பனிமலர்மேல் பாவைக்கு'[3] என்று இவரே சொன்னார். தம்முடைய அழகாலே எம்பெருமானைப் பிச்சேற்றி ஆச்ரிதருடைய குற்றங்களை அவன் காணாதிருக்கச் செய்பவர்கள் இப்பிராட்டிமார். இவர்களுடைய (மலரன அங்கையின்) மலர்போன்ற கைகள். அவைகளாலே (முப்பொழுதும் வருட) ஸர்வகாலமும் பிடிக்கும் படியாக (அறிதுயில்) ஆச்ரிதரை எவ்வாறு ரக்ஷிக்கலாம் என்ற சிந்தையோடு இருக்கிறவன். (அமர்ந்தனை) தட்டி எழுப்பினாலும் எழுந்திருக்கமாட்டாதபடி நித்திரையில் ஈடுபட்டாய்.

அறிதுயில் அமர்ந்து ரக்ஷித்தபடியைச் சொல்லுகிறார் மேலே.

---

1. பெருமா. திரு. 1.8    2. திருவாய். 9.2.10    3. திருநெடுந்தா. 18

நெறிமுறை நால்வகை வருணமுமாயினை

நெறிமுறை – சாஸ்திரமரியாதை தப்பாதபடி, நால்வகை வருணமுமாயினை – நான்கு வருணங்களும் நீ இட்ட வழக்காய் இருக்கும். அதாவது அந்தந்த வருணங்களை ஆத்மாக்களுக்குக் கொடுத்தும், அவர்கள் தம் வருணத்துக்குத் தக்கபடி செய்யும் ஆராதனத்தை ஏற்பவனும் நீயே. चातुर्वर्ण्यं मया सृष्टं[1] என்பது வருணங்களைக் கொடுத்ததைக் காட்டும். अहं हि सर्वयज्ञानां भोक्ताच प्रभुरेव च ।[2], वर्णाश्रमाचार वता पुरुषेण परः पुमान् । विष्णुना आराध्यते पन्थाः नान्यः तत्तोषकारकः[3] என்பன அவனே ஆராத்யன் என்பதைக் காட்டும்.

ஆத்மாக்கள் புகுந்து தங்கியிருப்பதற்கு ஹேதுவான தேஹங்களுக்குக் காரணமான பஞ்சபூதங்களும் நீயே என்கிறார்.

மேதகும் ஐம்பெரும்பூதமும் நீயே

மேதகும் – மேவித்து இருக்கை – புக்கு பொருந்தி இருக்கை, 'யாதானும் ஓர் ஆக்கையில் புக்கு அங்காப்புண்டும்'[4] என்கிறபடியே ஆத்மாக்கள் ஏதேனும் ஒரு சரீரத்திலே புகுந்து அதை देवोऽहं मनुष्योऽहं என்றபடியே தானாக நினைத்திருக்கும். அவற்றிற்குரிய கர்மாக்களை அநுஷ்டிக்கத் தகுதி பெற்றிருக்கும். இப்படி சரீரத்தினுடைய ஸத்தா ஸ்திதி நியமனங்கள் உன்னதீனமாயிருக்கும். இப்படியிருக்க, உன்னைத்தவிர எனக்கொரு ரக்ஷகர் உண்டோ என்கிறார்.

இதுவரை சாமான்ய ரக்ஷணத்தைச் சொல்லி அந்தரங்கையான நப்பின்னைப் பிராட்டிக்குச் செய்த விசேஷ ரக்ஷணத்தைச் சொல்லுகிறார்.

அறுபதமுரலும் கூந்தல் காரணம் ஏழ்விடையடங்கச் செற்றனை.

ஆறு கால்களையுடைய வண்டுகள் தேனைக் குடிப்பதற்காக வந்து மொய்த்து, மதுபானத்திலே மயங்கி ரீங்காரம் செய்யும் கூந்தலை உடையவள் நப்பின்னைப் பிராட்டி. இத்தகைய குழலை உடையவளாதலால் மிக இனியவளான பிராட்டியைப் பெறுவதற்குத் தடையாயிருந்த ஏழு எருதுகளை (அடங்க) ஊனப்படாதபடி – ஒன்றும் குறையாதபடி (செற்றனை) கழுத்தை நெறித்துக் கொன்றாய். இவ்வாறே உன்னைப் பெறத் தடையாயிருக்கும் என் ப்ரதிபந்தகங்களையும் போக்க வேணும்.

---

1. கீதை 4 –13 2. கீதை 9. 24 3. வி.புரா. 3.8.9 4. திருவிருத்தம் 95

அவனுக்கு ரக்ஷண சிந்தையிருந்தும், புருஷகாரத்துக்குப் பிராட்டியிருந்தும் அவனைப் பலபேர் அடையவில்லையே என்பதற்கு உத்தரம் அருளிச் செய்கிறார்.

**அறுவகைச்சமயமும் அறிவருநிலையினை**

எம்பெருமானை ஏற்காத மதங்கள் ஆறு உண்டு. அவை சார்வாகம், பௌத்தம், ஜைனம், தர்க்கம் (வைசேஷிகம், நியாயம்), சாங்கியம், பாசுபதம் என்பவை. இம்மதங்களைச் சார்ந்தவர்கள் எம்பெருமானை அறிய மாட்டார்கள். அறியாதபோது அடைவது எங்ஙனம்?

**ஐம்பாலோதியை ஆகத்திருத்தினை**

ஐந்து லக்ஷணங்களை உடைய கூந்தலை உடையவள் பெரிய பிராட்டியார். சுருண்டிருத்தல், நொய்த்திருத்தல், மணமிக்கிருத்தல், அடர்ந்திருத்தல், மென்மையாயிருத்தல் என்பன ஐந்து லக்ஷணங்கள். மென்மை, குளிர்த்தி, நாற்றம், நெடுமை, கருமை என்றும் சொல்லுவர். இவளை (ஆகத்திருத்தினை) திருமார்பிலே வைத்தருளினாய். न कश्चिन्नापराध्यति[1] என்ற பிராட்டியிருப்பதாலே ஆச்ரணீயம் என்பது பெறப்படுகிறது. மேலே ஐச்வர்ய சௌலப்யங்களைச் சொல்லப் போகிறார். அதுக்கு அடியான श्रियः पतित्वं கூறிற்று.

**அறம்முதல் நான்கவையாய் மூர்த்தி மூன்றாய் இருவகைப்பயனாய் ஒன்றாய் விரிந்து நின்றனை**

தர்மம் முதலான நான்கு புருஷார்த்தங்களையும் தருபவனாய் चतुर्णां पुरुषार्थानां दाता देवः चतुर्भुजः, देवेन्द्रः त्रिभुवनमथमिक पिंगः सर्वर्धिं त्रिभुवनगां च कार्तवीर्यः वैदेहः परमपदं प्रसाद्य विष्णुं संप्राप्ताः सकलफलप्रदो हि विष्णुः।[2] எனப்பட்டவன்

(மூர்த்தி மூன்றாய்) ப்ரம்ம ருத்ரர்களுக்கு நடுவே ஸ்வரூபேண நின்றும் அவர்களுக்கு அந்தர்யாமியாய் இருந்தும். मध्ये विरिञ्चि शिवयोः विहितावतारः,[3] सृष्टिस्थित्यन्तकरणीं ब्रह्मविष्णुशिवात्मिकाम्। स संज्ञां याति भगवान् एक एव जनार्दनः॥[4] (இருவகைப்பயனாய்) ஸுகம் துக்கம் என்ற இருவகைப்பட்ட கர்மபலன்களுக்கு நிர்வாஹகனாய் (ஒன்றாய் விரிந்து நின்றனை) ப்ரளய காலத்தில் நாம ரூப விபாகமற்று சேதனா சேதனங்களெல்லாம் உன்னோடு ஒட்டிக்கிடக்க सदेव என்று சொல்லும்படி ஸச்சப்த வாச்யனாய் இருந்தாய். ஒன்றாக இருந்த நீ

---

1. ரா.யு. 116.44 2. வி.தர். 43–47 3. வரத. பஞ்சா சத் 11 4. வி.பு. 1. 2. 66

ஸ்ருஷ்டிக்க வேண்டி बहुस्यां என்று ஸங்கல்பித்தபோது நாம ரூப விபாகங்களுள்ள பல பொருள்களாய் விரிவு பெற்று நின்றாய். ஸர்வமும் உன் ப்ரகாரமாயிருக்கச் செய்தேயும், அவற்றின் தோஷம் ஒட்டாதபடி ஒருவனாகவே நின்றாய். 'அறமுதல்' என்று தொடங்கி இதுவரை ஐச்வர்யம் (பரத்வம்) சொல்லிற்று. இனி 'கிடந்தவாறு எழுந்திருந்து பேசு'[1] என்று திருமழிசைப்பிரான் சொன்னவுடன் அப்படியே செய்ய உத்யோகித்தவனாகையால் ஸௌலப்யத்துக்கு எல்லை நிலமாய் அழகுக்கு உறைவிடமாய் இருக்கும் ஆராவமுதாழ்வானைச் சரணம் புகுகிறார்.

**குன்றாமதுமலர்ச்சோலை வண்கொடிப் படப்பை வருபுனல்பொன்னி மாமணியலைக்கும் செந்நெலொண்கழனித் திகழ்வன முடுத்த கற்போர் புரிசைக் கனக மாளிகை நிமிர்கொடி விசும்பில் இளம்பிறை துவக்கும் செல்வம்மல்கு தென் திருக்குடந்தை அந்தணர் மந்திர மொழியுடன் வணங்க ஆடரவமளியில் அறிதுயில் அமர்ந்தபரம! நின்னடியிணை பணிவன் வருமிடரகல மாற்றோ வினையே.**

(குன்றாமதுமலர்ச்சோலை) குறையாத தேன் வெள்ளத்தையும் அதைப் பெருகவிடும் மலர்களையும் உடைய சோலைகள். அவற்றையுடையது குடந்தை. எருவும் நீருமிட்டு வளரும் சோலை குன்றும். ஆராவமுதன் கடாக்ஷம் பெற்றதாகையாலே குன்றாமது. (வண் கொடிப்படப்பை) அழகிய கொடிக்கால்களை (கொடிகளையும்) நீர் நிலங்களையும் உடையது. வண் என்பது அழகையும் செழுமையையும் சொல்லுகிறது. (வருபுனல் பொன்னி மாமணியலைக்கும்) பெருகி வரும் நீர்ப்பெருக்கையுடைய காவிரி சிறந்த ரத்னங்களைக் கொண்டு சேர்க்கும். 'சந்திேனாடு மணியும் கொழிக்கும் புனல்காவிரி'[2] 'வேயின் முத்தும் மணியும் கொணர்ந்து ஆர்புனல் காவிரி'[3] என்றபடி (செந்நெலொண் கழனி) இக்காவிரிநீர் பாய்தலாலே செழித்து வளர்ந்த செந்நெற் பயிர்களையுடையதாய் அழகாயிருக்கும் கழனிகள். (திகழ்வனமுடுத்த) நீர்ப்பெருக்காலே செழித்துத் திகழும் வனங்களால் சூழப்பட்டதாய் (கற்போர் புரிசை) வித்வான்கள் படுகாடு கிடக்கும் நகரீ. புரிசை என்பது புரியைச் சொல்லுகிறது. 'புரிசெய்' என்று பாடம் கொண்டு நகரியாகச் செய்யப்பட்டதாய் என்பர் சிலர். கற்பு ஓர் புரிசை என்று பிரித்து வேலைப்பாடமைந்த மதிளையுடைய என்பர். (கனக மாளிகை) பொன்னால் செய்த மாளிகைகளில் (நிமிர்கொடி விசும்பில் இளம்பிறை துவக்கும்) நடப்பட்டு நிமிர்ந்து விளங்கும் கொடிகள் ஆகாயத்தில் இளம்பிறையை ஸ்பர்சிக்கும், தடுக்கும் என்றும் (செல்வம் மல்கு தென் திருக்குடந்தை) செல்வத்தையும் இனிமையையும் உடைய திருக்

1. திருச்சந்த 61 2. பெரி. திரு. 5.4.1 3. பெரி. திரு. 5.4.9

குடந்தையிலே (அந்தணர் மந்திரமொழியுடன் வணங்க) அநந்ய ப்ரயோஜனரான ப்ராஹ்மணர்கள் ரஹஸ்யமான வேதாந்த ஸூக்தங்களைக் கொண்டு ஆச்ரயிக்க (ஆடரவு அமளியில் அறிதுயில் அமர்ந்த பரம) தன்னுடைய ஸ்பர்சத்தாலே விரிக்கப்பட்ட பணங்களையுடைய திருவனந்தாழ்வானாகிற படுக்கையிலே, ஜகத்ரக்ஷணத்துக்காக உணர்ந்து கொண்டு கண் வளர்ந்தருளுகையாலே ஸர்வேச்வரனானவனே. மூச்சுக்காற்றாலே தூங்கு தொட்டில் போலே அசையும் என்றும் சொல்லலாம். (நின் அடியிணை பணிவன்) உன் திருவடிகளில் சரணம் புகுந்தேன். (வருமிடர் அகல) உன் திருவடியையும் ஸ்வரூப குணங்களையும் அநுபவிப்பதற்குத் தடையாக உள்ள விரோதிகள் நீங்கும்படியாக (மாற்றோ வினையே) ஸம்ஸார ஸம்பந்தமாகிற மஹா பாபத்தைப் போக்கியருள வேணும். 'தரியேன் இனி உன் சரணம் தந்து என் சன்மம் களையாயே''[1] – ஒப்பிடவும். இஷ்டப்ராப்திக்கும் அநிஷ்டநிவ்ருத்திக்கும் ஸித்தோபாயமான அவனைப்பற்றி சரணடைகிறார்.

**இடங்கொண்ட நெஞ்சத்திணங்கிக்கிடப்பன * என்றும் பொன்னித்**
**தடங்கொண்ட தாமரை சூழும் மலர்ந்த தண் பூங்குடந்தை***
**விடங்கொண்டவெண்பல் கருந்துத்தி செங்கண் தழலுமிழ்வாய்***
**படங்கொண்ட பாம்பணைப் பள்ளிகொண்டான் திருப்பாதங்களே.**

(பொன்னி.... சூழும்) காவிரி மற்றும் தாமரை மலர்கள் மலர்ந்த திருக்குளங்கள் இவற்றால் சூழப்பட்டதாய் (மலர்ந்த..... குடந்தை) மலர்ந்திருக்கும் குளிர்ந்த பூக்கள் நிரம்பிய திருக்குடந்தையிலே (விடங்கொண்ட) விஷத்தையுடைய (வெண்பல்) வெளுத்த பற்களையும் (கருந்துத்தி) கருத்த புள்ளிகளையும் (செங்கண்) சிவந்த கண்களையும் (தழலுமிழ்வாய்) தீயை உமிழும் வாய்களையும் உடைய (படம்.... அணை) படம் எடுத்தாடும் திருவனந்தாழ்வானாகிற படுக்கையின் மீது (பள்ளி கொண்டான்) சயனித்திருக்கும் ஆராவமுதனுடைய (திருப்பாதங்களே) திருவடிகளே (இடங்கொண்ட) விசாலமான (நெஞ்சத்து) ஆழ்வாரின் மனதிலே (என்றும்) எப்பொழுதும் (இணங்கிக் கிடப்பன) பொருந்தி இருக்கின்றன.

हृदयं तद्विजानीयात् विश्वस्यायतनं महत्[2] என்று உபநிஷத்தும் 'நெஞ்சமே நீள் நகராக இருந்த என் தஞ்சனே''[3] என்று நம்மாழ்வாரும் கூறுகிறபடி ஆழ்வாருடைய திருவுள்ளம் விசாலமானது.

---

1. திருவாய் 5.8.7 2. தைத். நாரா 26 3. திருவாய் 3.8.2

இவ்வாறு கலியன் ஆராவமுதாழ்வானிடத்திலே தமக்குள்ள பக்தியை ஒரு முழு ப்ரபந்தத்தின் மூலமாக வெளியிடுகிறார்.



ஆவியே! அமுதே! என நினைந்துருகி அவரவர்பணைமுலைதுணையா
பாவியேனுணராது எத்தனை பகலும் பழுது போயொழிந்தன நாள்கள்
தூவிசேரன்னம் துணையொடும் புணரும் சூழ்புனல் குடந்தையே தொழுது என்
நாவினாலுய்ய நான்கண்டு கொண்டேன் நாராயணாவென்னும் நாமம்

(பெரிய. திரு. 1.1.2.)

அன்றாயர் குலமகளுக்கரையன்தன்னை
அலைகடலைக் கடைந்தடைத்த அம்மான் தன்னை
குன்றாதவலியரக்கர் கோனை மாளக்
கொடுஞ்சிலை வாய்ச்சரந்துரந்து குலங்களைந்து
வென்றானை குன்றெடுத்த தோளினானை
விரிதிரைநீர் விண்ணகரம் மருவிநாளும்
நின்றானை தண்குடந்தைக் கிடந்தமாலை
நெடியானை அடிநாயேன் நினைந்திட்டேனே.

(திருநெடுந்தாண்டகம் 29)

## ஆழ்வார் திருவடிகளே சரணம்

## தூப்புல் அம்மான் திருவடிகளே சரணம்



